REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: பங்குனி 18உ சனி (31—3—56) ★ ★ வெளியூர்: பங்குனி 19உ ஞாயிறு (1—4—56) [இதழ் 247

## 10,000 கிராமங்களுக்கு மின்சார வசதியாம்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வேலை வாய்ப்புத் திட்டத்தை அதிகரிக்கும் முறையில் மேற்கொள்ளப்படவிருக்கும் மின்சார விரிவுபடுத்தும் வேலையையொட்டி, நாட்டிலுள்ள 10,000 கிராமங்களுக்கும், 500 சிறு நகரங்களுக்கும் மேற்பட்ட இடங்களில் மின்சார வசதிகள் செய்து தரப்படும் என்று தெரிகிறது.

பல மாநிலங்களிலுமாகச் சேர்த்து இது சம்மந்தமான திட்டங்களின் மதிப்பீடு சுமார் ரூ. 90 கோடி இருக்கலாமாம்.

முதல் திட்டத்தின்கீழ், இத்தகைய திட்டங்களுக்கென பல மாநிலங்களுக்கும் கடனாக ரூ. 20·67 கோடி தரப்பட்டது. அத்திட்டத்தின்கீழ் இந்த ஆண்டில் (1955-46) சுமார் 800 சிறு நகரங்களுக்கு மின்சார வசதி கிடைக்கக்கூடுமாம்.

# தேய்ந்து வரும் தெற்கிற்குத் தாக்குதல் மேல் தாக்குதல்!

## தேம்பிக் கிடக்கும் தெற்கிற்குத் துன்பத்தைத் தொடர்ந்து துன்பம்!

## கனரகத் தொழிலுக்கு ஏற்பாடில்லையாம்! புதுப் பொறியியல் கல்லூரிக்கும் அவசியமில்லையாம்!

## பெருந் தொழில்கள் இல்லை! பொறியியல் பயிற்சிக்குத் தேவையே இல்லை!

## இரண்டாம் ஐந்தாண்டு திட்டத்தில் பதினன்கு தொழில் கல்லூரிகள் நிறுவ ஏற்பாடு இருக்கிறது!

## கிழக்கு மண்டலத்திற்கு 6! மேற்கு மண்டலத்திற்கு 5! வடக்கு மண்டலத்திற்கு 3!

## தெற்கிற்கோ பெரியதோர் சூன்னம்!

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இந்தியத் துணைக்கண்டம் முழுவதும் 14 பொறி இயல் கல்லூரிகள் துவங்குவது என்று முடிவு கட்டப்பட்டிருக்கிறது. இவற்றுள் ஒன்று கூடத் தென்னுட்டில் நிறுவப்பட மாட்டாது எனத் தகவல் கிடைத்திருக்கிறது.

திட்டமிடப்பட்டிருந்த இந்த 14 கல்லூரிகளில் 3 கல்லூரிகள் வடக்குப் பிராந்தியத்திலும், கிழக்குப் பிராந்தியத்தில் ஆறு கல்லூரிகளும், மேற்குப் பிராந்தியத்தில் ஐந்து கல்லூரிகளும் நிறுவப்பட இருக்கின்றன.

பொறியியல் பட்டப்பயிற்சி பெற்றவர்களது தேவையைப் பொறுத்தே அந்தந்தப் பிராந்தியங்களில் நிறுவப்படவிருக்கும் கல்லூரிகளின் எண்ணிக்கை அமைந்திருக்கிறது.

வடக்குப் பிராந்தியத்திற்கு 350 எஞ்சினியரிங் பட்டதாரிகளும், 2,800 பட்டதாரிகள் கிழக்குப் பிராந்தியத்திற்கும், 500 பட்டதாரிகள் மேற்குப் பிராந்தியத்திற்கும் தேவைப்படுகின்றனர்.

ஆனல், தெற்குப் பிராந்தியத்தைப் பொறுத்தவரையில், இங்கு 150 பட்டதாரிகள் மட்டுமே தேவைப்படுகின்றனர் என்றும், இந்தத் தேவையை ஏற்கனவே சென்னை மாநிலத்தில் இருந்து வருகிற இரண்டு எஞ்சினியரிங் கல்லூரிகள்மூலம் பூர்த்திசெய்துகொள்ள முடியும் என்றும் கருத்தறிவிக்கப்படுகிறது.

இப்பிரச்சினை குறித்து தென் மாநிலத்தைச் சேர்ந்த பாராளு மன்ற உறுப்பினர்கள் சிலர் தங்கள் கடுமையான ஆட்சேபணையைத் தெரிவித்திருக்கின்றனர். தேவையான சாதனங்கள் இல்லை என்று கூறி, தெற்குப் பிராந்தியத்தில் கன ரகத் தொழிற்சாலைகள் நிர்மாணிக்கப்படவில்லையென்றும், அப்பகுதிகளில் தொழிற்சாலைகள் இல்லை என்ற காரணங்கூறி, அங்கு உயர்தரத் தொழில் நுணுக்கக் கல்விக்கூடங்கள் அமைக்கப்படவில்லை என்றும் அவ்வுறுப்பினர்கள் எடுத்துக்காட்டியிருக்கின்றனர் எனத் தெரியவருகிறது.

## நாட்டைத் துண்டாட விரும்பும் கட்சி பெரிய கட்சி அல்லவாம்!

சென்னை, மார்ச் 29—

"நாட்டைத் துண்டாட வேண்டுமென்று கூறும் கட்சி, பெரிய கட்சி அல்ல; நியாயமான கோரிக்கைகளை அரசாங்கம் மறுப்பதால் ஏற்படும் குழப்பத்தை சில கட்சிகள் பயன்படுத்திக் கொள்கின்றன. 'தமிழ் நாடு' என்று பெயர் வைப்பதில் அபிப்பிராய பேதத்துக்கு இடமில்லை; 'தமிழ் நாடு' என்று பெயர் வைப்பது தான் சாலச் சிறந்தது."

என்று, சென்னை சட்டசபையில் பொதுவுடமை கட்சி உறுப்பினரான தோழர் மணலி கந்தசாமி கூறியுள்ளார்.

## தொழில் துறைத் தகராறுகள்

### சிப்பந்திகளின் குறைகளே முக்கியக் காரணம்?

1956 ஜனவரி மாதத்தில் இந்தியாவில், 76 தொழில்துறைத் தகராறுகள் ஏற்பட்டனவாம். அத்தகராறுகளில் மொத்தம் 48,160 தொழிலாளர்கள் சம்பந்தப்பட்டிருந்தனராம்.

பரிசீலனை மாதத்தில் 66 தகராறுகள் முடிவுற்றன; 22 தகராறுகளில் தொழிலாளர்களுக்கு முழுதுமோ அல்லது ஓரளவுக்கோ வெற்றி ஏற்பட்டது; 19 தகராறுகளில் அவர்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை. 22 தகராறுகளில் முடிவு நிச்சயமில்லாமலும், 3 தகராறுகளில் முடிவு தெரியாமலும் இருந்தன. புதிய தகராறுகளில் 15 தகராறுகள் கூலி, படிகள் ஆகிய பிரச்சினை பற்றியதும், 27 தகராறுகள் 'சிப்பந்திகளின் குறைகள்' பற்றியவையும், 4 தகராறுகள் 'இதர காரணங்கள்' பற்றியவையுமாக இருந்தன.

## சென்னைக்கு நீர் யானைகள்

### ஆப்பிரிக்காவிலிருந்து வருகிறது

ஆப்பிரிக்காவிலிருந்து ரூ 27000 செலவில் 2 நீர் யானைகளைசென்னை நகர்சபை மிருகக்காட்சி சாலைக்காக வாங்கப்பட்டுள்ளது. அடுத்தத் திங்கள் இடையில், மொம்பாசாவிலிருந்து கப்பலில் அவைகள் இங்கு வந்துசேரும்.

## 'தென்னுட்டின்மீது கட்டாய இந்தியை திணிக்காதீர்'

### அத்திணிப்பால் நாட்டின் ஒற்றுமை தகர்ந்து போகும்

### 'ஆங்கில மொழி ஜனநாயகத் தத்துவத்தை நமக்குத் தந்திருக்கிறது'

மைசூர் சட்டசபையில் முதலமைச்சர் அனுமந்தையா அறிவிப்பு

பெங்களூர், மார்ச் 30—

"ஆங்கிலத்திற்கு எதிராகக் கூச்சலிடுவது ஒருவகையான வெறியே ஆகும். ஆங்கில மொழி நமக்கு அறிவைப் புகட்டினது மட்டுமல்லாமல், ஜனநாயகத்தைப் பற்றிய விஷயங்களையும் போதித்திருக்கிறது."

இவ்வாறு, மைசூர் மாநில முதலமைச்சர் அனுமந்தையா, மாநில சட்டசபையில் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

மேலும் அவர் கூறினர்:—

"மைசூர் மாநிலத்திலோ, அல்லது மற்றத் தென்னிந்திய மாநிலங்களிலோ இந்தி மொழி அறவே நிர்ப்பந்திக்கப் படக் கூடாது. இந்தி மொழி வழங்காத பகுதிகளில் அம்மொழி கட்டாயமாகப் புகுத்தப்படுமானல், 'இந்தியாவின் ஒற்றுமை'க்குப் பங்கம் விளைவிக்கும் ஒன்ருக நிச்சயம் ஆகிவிடும்.

"எனவே, இந்திய சர்க்கார் எந்தப் 'பிரச்சினைக் குறித்தும் ஆலோசனை செய்யும்போது, நாட்டின் ஒற்றுமையை நிலை நாட்டுவதற்குத் தேவையான எல்லாவித முன்னேற்பாடுகளையும் கவனத்தில் கொண்டாக வேண்டும்; அவ்வாறு நடந்து கொள்வதின்மூலம் 'இந்திய ஒற்றுமை'யை இந்தி வெறியர்கள உருக்குலைத்து விடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்."

'அலுவல் மொழிக் குழு முன் சாட்சியம் அளிக்கு முன்னர் மாநில சர்க்கார் சட்டசபையில் இது குறித்துக் கலந்தாலோசிக்கவில்லை' என்று கோவிந்த ரெட்டி என்பார் குற்றஞ் சாட்டினபோது, அமைச்சர் தென் இந்தியாவில் இந்தி மொழி கட்டாயமாகப் புகுத்தப்படாது என்று பொதுவாகத் தாம் எண்ணினதாகக் கூறியிருக்கிறார்.

"ஆங்கில மொழியைப் பொறுத்தவரையில், அம்மொழியினல் தொழில் நுட்ப முன்னேற்றம், விஞ்ஞானத்துறை அபிவிருத்திகள் போன்ற நன்மைகள் கிடைத்துள்ளதுமட்டு மல்லாமல், ஜனநாயகத்தின் கோட்பாடுகளையும், தத்துவத்தையும் போதித்திருக்கிறது" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

அலுவல் மொழிக் குழுவிடம், சட்டசபையைக் கலக்காமலேயே சாட்சியமளித்த சர்க்காரின் போக்கைக் கண்டித்துப் பேசிய சோஷலிஸ்டுக் கட்சி உறுப்பினர் எம். கோவிந்த ரெட்டி, இந்தி மொழி வலுக்கட்டாயமாகத் திணிக்கப்படுவதை எதிர்த்துப் பேசுகையில், 'அதனுடைய முக்கியத்துவத்தையும் அதைப் பயன்படுத்துவதையும் பார்க்கும்போது, ஆங்கில மொழி, தேசிய மொழிகளில் ஒன்ருக அங்கீகரிக்கப்படவேண்டும்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தியாவில், 1955-56-ம் ஆண்டில் மொத்தம் 2·33 கோடி டன் நெல் உற்பத்தியாகுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

மாநாட்டுச் செய்தி:

## திருச்சி மாநில மாநாடு

### வேலைகள் துரிதமாக நடைபெற்று வருகிறது

மே மாதம் 17, 18, 19, 20 தேதிகளில் திருச்சியில் நடைபெறவிருக்கிற தி. மு. கழக மாநில மாநாட்டு வேலைகள் துரிதமாக நடைபெற்று வருகிறது.

28—3—56-ந் தேதி இரவு அண்ணு அவர்கள் திருச்சி வந்து சேர்ந்தார்கள். மாநில மாநாட்டு வரவேற்புக் குழுத் தலைவர் அன்பில் தர்மலிங்கம், செயலாளர் எம். எஸ். மணி, ஜி. பராங்குசம் மற்றும் முக்கியஸ்தர்களுடன் மாநாடு சம்பந்தமாகக் கலந்து பேசிவிட்டு, 29—3—56-ந் தேதி மாலை மாநாடு நடைபெறவிருக்கின்ற பந்தயத் திடலை (ஜமால் மொய்தீன் கல்லூரி சமீபம்) பார்வையிட்டு, முக்கிய மாநாடு கூடும் பந்தல் போடுவதற்கான இடத்தை குறிப்பிட்டுத் தந்துள்ளார்கள்.

மாநாட்டுப் பந்தல் 1000 × 600 அளவிலும் (3 இலட்சம் பேர் உட்காரக்கூடியது) தவிர 50 'ஸ்டால்'களும், ஏககாலத்தில் சுமார் 5,000 பேர் சாப்பிடக்கூடிய 4 உணவு விடுதிகளும், பெண்கள் தங்குவதற்குத் தனி உரையுள்ளும், மாவட்டப் பிரதிநிதிகள் தங்குவதற்கு மாவட்ட வாரியாக தனித்தனி உரையுள்களும், போலீஸ் நிலையம், 'டெலிபோன்' நிலையம், அஞ்சல்-தந்தி அலுவலகம், தகவல் அறிவிக்கும் நிலையம், தீயணைக்கும் படையினர் தங்குவதற்கு உரிய அலுவலகமும், தொண்டர்கள் பாசறை அமைப்பதற்கான ஏற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன.

ஓவியக் கண்காட்சிகள் அமைப்பதற்கானத் தனி இடம் அமைக்கப்பட்டு வருகிறது.

பொதுவாக மாநாடு நடக்கும் திடலை அழகு பொருந்திய ஓர் சிறிய சிற்றூராக அமைப்பதற்கான ஏற்பாடுகளை, அண்ணு அவர்கள் திருச்சி கழக முக்கியஸ்தர்களுடன் கலந்து பேசி ஆவன செய்து வருகிறார்.

—மாநில மாநாடு விளம்பரக் குழுவினர்

Best copy available.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 31—3—'56 சனி

# செய்யாத குற்றத்துக்குத் தண்டனை!

புனரமைப்பு மசோதா விவாதத்திற்கு பதிலளித்த நிதி மந்திரி சுப்பிரமணியம், நமது முன்னேற்றக் கழகத்தின்மீது இருந்துவரும் ஆத்திரத்தை, வழக்கம்போல் காட்டிக் கொண்டு இருக்கிறார். அவ்வியல்பான ஆத்திரத்தைக் காட்டிக் கொள்வதற்கு, என்றென்றைக்கும் வீசி வரும் ஏசல் பாணியைத்தான் இப்பொழுதும் மேற்கொண்டு இருக்கிறார்.

இதுவரை, நம்மை அவர் சினந்து கடிந்துரைத்ததற்கும், இப்பொழுது கடிந்துரைத்திருப்பதற்கும் அடிப்படையில் ஒரு வித்தியாசம் இருக்கிறது. அதாவது, நமது குறிக்கோள் குறித்து நாம் அறிவித்த ஏதாவது ஒன்று, தனக்குப் பிடித்தமில்லாது இருக்கும்பட்சத்தில், அதை ஒரு புகலாக வைத்துக் கொண்டு, அவர் நம்மீது கர்ண கடூரமான வசைச் சொற்களை சரமாரியாக வீசுவது வழக்கம். ஆனால், இப்பொழுதோ, நாம் இதுவரை நமது கருத்தை அறிவிக்காத நிலையிலும், அறிவித்திருப்பதாகத் தாமே கற்பனை செய்துகொண்டு, இழிமொழிகளைத் தொடுசரம்போல் தொடுத்து இருக்கிறார், அந்தத் துன்மந்திரி.

நீண்ட காலக் கருத்தாக இருந்துவந்த மொழிவழிக் கோட்பாட்டை மாற்றிக் கொண்டு, இரு மொழி—பன்மொழி மாகாணங்களை உருவாக்கும் கருத்தை காங்கிரஸ் கட்சி கைக்கொள்ள முன்வந்தது. அதனடியாக தட்சிணப் பிரதேச அமைப்புக் கருத்தும் பிறந்தது.

திராவிட இன மொழி மக்கள் வாழும் திராவிடம், மொழி வழியில் பிரிந்து, பின்னர் தம் தம் விருப்பம்போல் இன அடிப்படையில் ஒன்றுபட்டு திராவிடக் கூட்டாட்சி அமைப்பதையே, நமது கழகம் மூல நோக்கமாகக் கொண்டிருப்பதால், மொழிவழி மாகாண ஏற்பாட்டை ஒதுக்கித்தள்ளவும், அதற்குப் பதிலாக இருமொழி மும்மொழி மாகாண அமைப்பை உருவாக்கவும் முனைந்த காங்கிரஸ் கட்சியின் போக்கை, முழு மூச்சுடன் எதிர்க்க முன்வந்தது. எனவே, பல்வேறு காரணங்களுக்காக தட்சிணப்பிரதேச அமைப்புக் கருத்தை எதிர்க்கவும், மொழி அடிப்படையில் மாகாணங்களை உருவாக்கவும், முன்வந்த கட்சிகளுடன், கொள்கை உடன்பாட்டின் காரணமாக, நமது முன்னேற்றக் கழகம் கூட்டு சேர்ந்தது. பிறர் ஐயுறுவதற்குத் துளியும் இடமளிக்காதவகையில், தட்சிணப் பிரதேசத்தை எதிர்ப்பதிலும் இருதயபூர்வமாக, நமது கழகம் கூட்டணியில் பணியாற்றியது.

தட்சிணப் பிரதேச எதிர்ப்பில் நமது கழகம் தீவிரமாக ஈடுபட்டதைத் தூற்ற வேண்டுமென்று அவர் கருதி இருந்தால், சென்னை சட்டசபையில் மட்டுமேயல்லாது, பெண்கள் கூட்டத்திலும்கூட, நிதி அமைச்சர் பிதற்றி இருக்கலாம். நமது எதிர்ப்பையும் உள்ளடக்கியுள்ள கூட்டணியின் எதிர்ப்பினால், நேரடியாகப் பாதிக்கப்பட்டிருப்பவர் நிதி அமைச்சர்தான் என்பதை நாடு அறியும். எனவே, அதற்காக அவர் வசை பொழிவதையும் நம்மால் புரிந்துகொள்ள முடியும். அதனால், நம்மை ஏச வேண்டும் என்ற அவர் ஆசையும் நிறைவேறி, தட்சிணப் பிரதேசம் இப்போதைக்கு இல்லாததால் ஏற்பட்டுள்ள கடுப்பும் குறைந்து, நமது அரசியல் எதிரியாக இருந்துகொண்டு நம்மைத் தாக்கிவரும் ஒருவருக்கு, நம்மாலும் மனச்சாந்தி அளிக்க முடிகிறதே என்று உண்மையிலேயே நாம் மகிழ்ந்தும் இருப்போம்.

தட்சிணப் பிரதேச அமைப்புக் கருத்தை நாம் எதிர்த்துத் தொலைத்ததற்காக, நம்மை தண்டிப்பதை விடுத்து, புதிய மண்டலக் குழு ஏற்பாட்டிற்கு உடன்பாடாகவோ எதிராகவோ, நமது கழகம் கருத்தறிவிக்காத நிலையிலும், நாம் அவ்வேற்பாட்டை எதிர்ப்பதாகத் தாமாகக் கற்பனை செய்துகொண்டு, நாம் செய்யாத குற்றத்துக்குத் தண்டனை கொடுக்கத் துடியாகத் துடிக்கிறார் துன்மந்திரி!

ஒருவர் புரியாத ஒரு செயலை, அவர் புரிந்ததாகப் பழி சுமத்தி அவரை தண்டிக்க வேண்டும் என்ற அறநெறியைப் பின்பற்றி நமக்குச் சாபமிடுகிறாரே, அந்தப் பெருநெறி பயிற்சி, எந்த அறநூலைப் பயின்றதின் விளைவு என்பதை, நிதி அமைச்சர் விளக்க வேண்டும். ஆச்சாரியாரின் சீடரான நிதி அமைச்சர் சக்ரவர்த்தித் திருமகனின் அடிசுவட்டைப் பின்பற்றி, நம்மை வீரவாலியாக மதித்துச் சாட முனைந்ததில் ஆச்சரியமில்லை!

தமிழ், மலையாளம், கன்னடம், ஆந்திரம் ஆக நான்கு மொழி பேசும் மக்கள் வாழும் பகுதியைக் கொண்டதுதான் திராவிடநாடு என்கிறோமாம். புதிய மண்டலக் குழுவும அந்நான்கு மொழி மக்கள் வாழும் பகுதியையே கொண்டுள்ள அமைப்பாம். இத்துறையில் இரண்டுக்கும் ஒருமைப்பாடு இருப்பதால், திராவிட நாடு கோரும் நாம், மண்டலக் குழு ஏற்பாட்டை இருகையேந்தி ஏற்றுக்கொள்ள வேண்டுமாம். ஆனால், நாமோ எதிர்க்கிறோமாம், அவ்வேற்பாட்டை!

திராவிட நாடு நிலப் படம் கூட நாம் வெளியிட்டுள்ளோமாம். திராவிட நாடு படத்தைக் கூட வெளியிட்டுள்ள நாம், மண்டலக் குழு ஏற்பாட்டை எதிர்க்கிறோமாம!

நமது எதிர்ப்பு, குறிப்பிட்ட கொள்கையின் அடிப்படையில் பிறந்ததல்லவாம்! நமது எதிர்ப்பு ஒரு தேர்தல் அரசியல் சூத்தாம!

புதிய மண்டலக் குழு அமைப்புக்கும், நமது திராவிட நாடு கோரிக்கைக்கும் உள்ள ஒற்றுமை பற்றியோ, வேற்றுமை குறித்தோ, இன்னும் நமது கழகக் கருத்து அறிவிக்கப்படவில்லை. அதற்குரிய அவசியமோ, காலமோ இன்னும் ஏற்படவில்லை.

நாம், மண்டலக் குழுவை ஏற்கவுமில்லை—எதிர்க்கவுமில்லை—அதிகாரபூர்வமாகக் கருத்து அறிவிக்கப்படவுமில்லை. எரியும் வீடல்ல, பிடுங்கினவரையில் ஆதாயம் என்று அவசரப்படுவதற்கு!

நாம் கோரும் திராவிட நாடும் மண்டலக் குழுவும் ஒத்து இருக்கிறது என்று கூறும் நிதி அமைச்சரின் வாதத்தை, விவாதத்திற்காகவே ஒப்புவோம். அந்நிலையில் திராவிட நாடு கோரிவரும் நமக்கு, அவர் வெளிப்படையாக நன்றியல்லவா கூறி இருக்கவேண்டும்? அதற்காக, அவர், நம்மைப் பாராட்டி அல்லவா சட்டசபையில் பேசி இருக்க வேண்டும்?

நமது கழகம் புயல் நிதிக்குச் செய்த உதவியையே வெளிப்படையாக ஒப்புக்கொண்டு ஒரு சொல் சொல்லுவதற்கு மனம் படைத்திராத நிதி அமைச்சரிடமா, நாம் பாராட்டை எதிர்பார்ப்பது? பாராட்ட வேண்டாம்; நம்மைத் தூற்றுமலாவது, அவர் இருந்திருக்கக்கூடாதா?

கொள்கை அடிப்படையில் தோழமை கொண்டுள்ள தோழர் கோவிந்தசாமி அவர்கள், திராவிட நாடு கோட்பாட்டின் தத்துவத்தை, நாவடக்கமற்ற அமைச்சரின் கன்னத்தில் அரைவதுபோல், சுடச்சுட எடுத்துக்காட்டி உள்ளார். எதிர்பாரா நிலையில் குத்தீட்டிபோல் பாய்ந்துவந்த விளக்கத்தைக் கேட்டுத் திகைத்துப்போன மந்திரி, மீண்டும் தன்னிலைபெற்றவராய், திராவிடநாடு பற்றிய உண்மையைத் தெரிந்துகொள்ள தான் விரும்பவில்லை என்று வீராப்புப் பேசி இருக்கிறார்.

தமிழ் நாடு எனப் பெயரிட முடியாது எனக்கூறும் அளவிற்குத் தாசர் புத்தி தலைக்கேறி இருக்கும் நிதி அமைச்சருக்கு, திராவிட நாடு பிரச்சினை புரியாது — புரிந்துகொண்டாலும் அவரால் காதொடிந்த ஊசியளவும் அப்பிரச்சினைக்கு உதவி கிடைக்காது. அவர் உதவி எதிர்பார்க்கப்படவும் இல்லை!

நாம் கருத்து அறிவிக்காத மண்டலக் குழு அமைப்பை, நாம் எதிர்ப்பதாகப் பழி சுமத்தி, நமது கழகத்தைத் தூற்ற முனைவது அரசியல் அநாகரீகமாகும் என்பதை எடுத்துக் காட்டுகிறோம். இது அவருக்கல்ல — நாட்டு மக்களுக்கு.

## 11,060 ஏக்கரா நிலத்தில் உப்பு உற்பத்தியாம்!

புதுடில்லி, மார்ச். 28—

ஆந்திராவில் மொத்தம் சுமார் 11,060 ஏக்கரா நிலத்தில் உப்பு உற்பத்தி செய்யப்பட்டு வருகிறதென்றும் மதிப்பிடப்பட்டுள்ளதென்றும், அப்பிரதேசத்தில் மூன்று கூட்டுறவுச் சங்கங்கள் உப்பு உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன என்றும் மக்கள் சபையில் தரப்பட்டுள்ளது.

## இந்தியத் தையல் யந்திரம்

ஏடன், ஆஸ்திரேலியா, ஆப்கானிஸ்தான், பர்மா, இலங்கை, எகிப்து, கிரீஸ், கோல்ட் கோஸ்ட், நியூலாந்து, சௌடிமாலா ஆகியவை உட்பட மொத்தம் 44 நாடுகள், இந்தியத் தையல் இயந்திரங்களை இறக்குமதி செய்துள்ளனவாம்.

# விருந்தினர்களை உபசரிப்பதில் வரம்பு மீறி செலவழிக்கும் போக்கு!

## 'இந்திய நாட்டின் உண்மை நிலையை படம்பிடித்துகாட்டிவிடும்'

"தங்களுடைய அயல் நாட்டு உறவுகளுக்கும் அப்பாற்பட்ட முறையில் ரஷ்யத் தலைவர்கள் மேற்கொண்ட இந்தியச் சுற்றுப் பணத்தின்போது, அவர்களுக்கென செலவழித்ததில் மிகுந்த சிக்கன முறையைக் கையாண்டிருக்கவேண்டும். தங்களுடைய முக்கிய விருந்தினர்கள் என்ற முறையில் இந்திய சர்க்கார் நடந்து கொண்டதைவிட, ரஷ்யத் தலைவர்களுடைய ஆலோசகர்கள், இந்தச் செலவு விஷயத்தில் நேர்மையுடனும், தேவைக்கேற்றாற்போலவும் நடந்து கொண்டிருக்க வேண்டும். அப்படி நடந்திருந்தால், இதுவரை ஏற்பட்டிருக்கிற செலவுகள் குறித்து எவ்வித ஆட்சேபணையும் கிளம்பியிருக்காது.

"சென்னைசர்க்காரைப் பொறுத்த வரையில் ரஷ்யத் தலைவர்களின் வருகையை யொட்டி பந்தோபஸ்து, பாதுகாப்புச் செலவுகளுக்காக மட்டும் ரூ. 1,17,470 செலவாகியிருக்கிறது.

"வருகிற விருந்தினர்களை உபசரிப்பதிலும், அவர்களுடைய சுற்றுப் பயணச் செலவுகள் நிர்ணயிப்பதிலும் இன்னும் சிக்கனமாக்கிக்கொள்ள இடமிருக்கிறது என்றே பலரும் எண்ணி வருகின்றனர்.

"மேற்கு வங்க முதலமைச்சரின் தகவல்படி, ரஷ்யத் தலைவர்களான புல்கானின், குருஷ் சேவ் ஆகியோருக்களிக்கப்பட்ட வரவேற்பு சுற்றுப் பயணத்தையொட்டி, ரூ. 3,85,563 எத்தனவே செலவிடப்பட்டிருக்கிறது; மேற்கொண்டும் ரூ. 1 இலட்சம் செலவாகியிருக்கக் கூடும் என்றும் தெரிகிறது.

"ஒருவேளை, இங்குள்ள அதிகார வட்டாரங்களிடையே இந்தியா போன்ற எளிய நாடுகூட, தன்னுடைய விருந்தாளிகளை, தன்னுடைய நிலைமைகளுக்கும், வாழ்க்கைத் தரத்திற்கும் ஒத்தாறபோலல்லாமல், ஆடம்பரமாக வரவேற்கவேண்டும் என்ற எண்ணம் நிலவி வரலாம் என்றுகூட நினைக்கவேண்டியிருக்கிறது.

"ஆனால், வரம்புக்குமீறி விருந்தினர்களை வரவேற்று அவர்களுக்காக அளவு கடந்து செலவழிப்பதும், செல்வாக்கு இருந்தும் ஆடம்பரமில்லாமல் நடந்து கொள்ளுகின்ற பிற நாடுகளுடன் இம்மாதிரி ஆடம்பரமாக நடந்து கொள்வதும் எந்த அளவுக்கு வேகமாக நடைபெறுகிறதோ, அந்த அளவுக்கு, விரைவிலேயே இந்திய நாட்டின் உண்மை நிலையை நமது மதிப்பிற்குரிய விருந்தினருக்குப் படம் பிடித்துக் காட்டுவது போன்றாகிவிடும்."

—இவ்வாறு, பம்பாயிலிருந்து வெளிவரும் 'டைம்ஸ் ஆப் இந்தியா' என்ற ஆங்கில இதழில் 'ஆடம்பர விருந்தினர்' என்ற தலைப்பிட்டு எழுதப்பட்டிருக்கிறது.

# 'அம்பர் சர்க்கா' திட்டத்துக்கு ரூ. 80 கோடி டில்லி மானியமாம்!

## அதிகப் பணம் திரட்ட மொத்த சொத்துக்கள் மீது வரி விதிப்பு?

### இந்திய சர்க்கார் ஆலோசித்து வருகிறதாம்

அகமதாபாத், மார்ச் 28—

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க மேற்கொண்டும் பணத் தேவை இருப்பதையொட்டி மொத்த சொத்துக்கள்மீது வரிவிதிப்பது பற்றிய யோசனை, இந்திய சர்க்காரின் ஆலோசனைகளுள் ஒன்றாக இருக்கிறது,"

என்ற தகவலை, இங்குள்ள பத்திரிகையாளரிடையே பேசிய மத்திய சிவில், நில வரி அமைச்சர் எம். சி. ஷா தெரிவித்திருக்கிறார்.

அதிகப்படியான வரி விதிப்பின் மூலம், இரண்டாவது திட்டச் செலவுகளுக்கான அதிகப்படிச் செலவுகளுக்காக ரூ. 220 கோடி வரை சேமிப்பது என்று நகல் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருந்தாலும், இப்போது 'பலவகையான காரணங்களை' முன்னிட்டு அத்தொகையை மேலும் அதிகரிக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது என்றும் அவர் கூறியிருக்கிறார்.

மேலும், இரண்டாவது திட்டக் காலத்தில் அம்பர் சர்க்காவை நடைமுறையில்கொண்டு வரத் தேவையான ரூ 80 கோடி பெறுமான திட்டத்திற்கு இந்திய சர்க்கார் உதவித் தொகை தருவது சாத்தியமானதுதான் எனறும் அவா தெரிவித்திருக்கிறார்.

நாடு முழுமையிலும் ஆயுள் இன்ஷ்யூரன்சை தேசிய மயமாக்குவதின் மூலம், வருகிற 1957-ம ஆண்டு இறுதிக்குள்ளாக ஆயுள் பாலிசிகளில் உள்ள இன்ஷ்யூர் செய்யப்பட்ட தொகை இப்போதிருக்கிறதைவிட இரட்டிப்பு மடங்கு அதிகமானதாக இருக்கும் எனத் தாம் நம்புவதாகவும் அவர் தெரிவித்திருக்கிறார்.

"இப்போது, நாடு முழுமையிலும் உள்ள ஆயுள் பாலிசிகளில் இன்ஷ்யூர் செய்யப்பட்ட தொகை ரூ. 1,100 கோடி; மத்திய சர்க்காரால் தயாரிக்கப்பட்டிருக்கிற விரிவான திட்டங்களினால் 1957-ம் ஆண்டுக்குள் இத்தொகை ரூ 2,200 கோடிக்குமேல் அதிகரித்துவிடும்" என்று அவர் கூறியிருக்கிறார்.

## 'அம்பர் சர்க்கா'க்கள்

### பெங்களூருக்கு அருகில் பெரும் அளவில் உற்பத்தியாகுமாம்!

பெங்களூர், மார்ச் 29—

"தென்னாட்டு மாநிலங்களின் தேவைகளை நிறைவேற்ற, பெங்களூரிலிருந்து 8 மைல் தொலைவிலுள்ள கிருஷ்ணராஜபுரத்தில் 'அம்பர் சர்க்கா'க்களை பெரும் அளவில் மத்திய கதர், கிராமக் கைத்தொழில் 'போர்டு' உற்பத்தி செய்யும்," என்று, மைசூர் கைத்தொழில் இலாகா அமைச்சர் தெரிவித்துள்ளார்.

## தர்ம சொத்துக்கள் மீது 'கண்ணோட்டம்'

### திட்டக் குழுவின் பரிசீலனையில் இருக்கிறதாம்

புதுடில்லி, மார்ச். 28—

மத நிறுவனங்களும், தர்ம சொத்துக்களும் மேலும் திறம்பட நிர்வகிக்கப் படுவதற்கும், அவற்றின் நிதி ஆதாரங்கள் பூரணமாகப் பயன்படும்படி செய்வதற்கும் மேற்கொள்ளப்படவேண்டிய நடவடிக்கைகள் பற்றிய பிரச்சினை இன்னும் திட்டக் குழுவின் பரிசீலனையில் இருந்து வருகிறதாம்.



# தமிழ்வேந்தர் ஆட்சியை உலகமெலாம் அறியும்; 'பாரத்' என்ற பெயர் எந்நாட்டவருக்கு தெரியும்?'

## 'மேலிடத்தின் உத்தரவுக்காக மக்களின் உரிமையைப் பறிப்பதா விவேகம்?'

## 'கேலிக்குரிய சித்திரங்களாக தமிழ்நாட்டு அமைச்சர்கள் மாறும் சூழ்நிலை உருவாகுவானேன்?'

### சென்னை சட்டசபையில் ஏ. கோவிந்தசாமி இடித்துரை

"மாநிலச் சீரமைப்பு மசோதா, தமிழர்களுக்குப் பெரிய பாதகத்தை விளைவித்திருக்கிறது; தமிழர்களுடைய உரிமையைப் பறித்திருக்கிறது. காங்கிரஸ் ஆட்சிக்கு வருவதற்கு முன்னாலேயே, மொழி வழி நாடு பிரியவேண்டுமென்று பல மாநாடுகளில் தீர்மானம் போட்டு இருந்தும்கூட, இந்த மசோதா வெளிவருகின்ற நேரத்தில், 'நிர்வாக வசதிக்காகத்தான் மாநிலங்கள் பிரிக்கப்படுகிறது; மொழியின் அடிப்படையில் பிரிக்கப்படமாட்டாது' என்று சொன்னாலும்கூட, பெருவாரியான மாகாணங்கள் மொழியின் அடிப்படையிலேயே பிரிக்கப்பட்டிருக்கின்றன.

அப்படிப் பிரித்து இருக்கின்ற நேரத்தில், தமிழ் நாட்டுக்குச் சேரவேண்டிய தேவிகுளம், பீர்மேடு, கொச்சின்—சித்தூர் நெய்யாற்றங்கரை போன்ற பகுதிகள் தமிழ் நாட்டுடன் ஏன் சேர்க்கப்பட வேண்டும் என்ற காரண காரியங்களை, இன்றையத் தினம் சர்க்கார் கட்சியில் வீற்றிருக்கின்ற இதே சுப்பிரமணியம் அவர்கள்தான், எடுத்து நல்ல முறையிலே விவாதித்தார். அதையேதான் இப்போதும் வலியுறுத்திச் சொல்கிறேன். அன்றையத்தினம் அவர் சொன்னதிலிருந்து இன்றையத்தினம் ஏன் அவர் பின்வாங்க வேண்டும் என்றுதான் நமக்குப் புரியவில்லை? மேல் இடத்து உத்தரவு என்று கூறி, மக்களின் எண்ணத்தைத் தப்புக் கணக்காக நினைக்கிற அளவுக்கு—சட்டசபை தமிழ் உறுப்பினர்கள் பெருவாரியான வாக்குகளால் ஏகமனதாகத் தீர்மானத்தை நிறைவேற்றியிருந்தும், ஒவ்வொரு மாவட்டக் கழகத்திலும் தேவிகுளம், பீர்மேடு பகுதிகள் தமிழகத்துடன் சேர்க்கப்பட வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றிய பின்பும், தமிழ் நாட்டிலுள்ள எல்லாப் பஞ்சாயத்துப் போர்டுகளிலும் தமிழ்ப் பேசும் பகுதிகள் தமிழ் நாட்டுடன் இணைக்கப்பட வேண்டுமென்ற தீர்மானத்தை நிறைவேற்றிய பின்னரும்—பொதுமக்கட் கருத்துக்கு மதிப்பு அளிக்காது, நேரு சர்க்கார், எதேச்சாதிகார மனப்பான்மையோடு தமிழர்களைப் பழி வாங்குகின்ற நிலையில், தமிழரின் உரிமையைப் பறித்துக் கொண்டது.

'நமக்குச் சமாதானத்தைச் சொல்லவந்த நேரு அவர்கள், நமக்கு ஏற்கனவே 'கமிஷன்' வழங்கிய செங்கோட்டையின் ஒரு பகுதியை, குரங்கு அப்பத்தை பங்கிட்ட கதையாகப் பிரித்து அவர்களுக்குக் கொடுத்துவிட்டார்கள்!"

—என்று, சென்னை சட்டசபையில், மாநிலப் புனரமைப்பு மசோதா விவாதத்தின்போது தோழர் ஏ கோவிந்தசாமி அவர்கள் குறிப்பிட்டார்.

தொடர்ந்து அவர் பேசியதாவது:—

"ஜனநாயகத்துக்கு முரணாக, ஒரு கட்சி, சட்டசபையிலே இந்தப் பிரச்சினை விவாதத்துக்கு வருவதற்கு முன்னாலேயே ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறது; இம்மசோதாவுக்கு—முக்கியமான கருத்துக்கு முரணாக எந்த உறுப்பினரும் பேசக்கூடாது என்று அந்த அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்கள்" இதுதான் ஜனநாயகமா?

"ஒரு கட்சி (காங்கிரஸ்) தனி அறிக்கை விடுவதால் சட்டசபையில் இருப்பவர்களுக்கு வேலையேயில்லை. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த மலபார் உறுப்பினர்களுக்கும், கன்னட தேச உறுப்பினர்களுக்கும் இங்கேபேச உரிமை வழங்கப்பட்டு இருக்கிறது. ஆனால் தமிழ் நாட்டைச் சேர்ந்த காங்கிரஸ் உறுப்பினர்கள் பேசாமல், அவர்களுக்கு வாய்ப்பூட்டுச் சட்டம் போட்டிருக்கிறார்களே, அது ஏன்? அவர்களைப் பேசவிட்டால் எங்கு, தேவிகுளம், பீர்மேடு நிச்சயமாகத் தமிழ் நாட்டுக்குத்தான் சேரவேண்டும் என்பார்களோ என்ற பயத்தால்தான் அவர்கள் பேசுவதற்குத் தடை விதித்து இருக்கிறார்கள்.

"'தமிழ் நாடு' என்று பெயர் வையுங்கள்—என்று அன்றைக்கும் வாதாடினோம்; இன்றைக்கும் வாதாடுகிறோம். நிதி மந்திரி சுப்பிரமணியம் விவாதத்திற்குப் பிறகு, திருத்தம் கொண்டுவர வேண்டிய நேரத்தில் முன்பு நம்மை ஏமாற்றி விட்டார்.

"இந்த மசோதா வரும்போது, 'தமிழ் நாடு என்று பெயர் வைத்துக் கொள்ளலாம்; நமக்குள்ளே ஒற்றுமை இருக்கவேண்டாமா? ஏகமனதாகத் தீர்மானத்தை நிறைவேற்றிவிடலாம்; நமக்குள்ளே பிளவைக் காட்டவேண்டாம்' என்று கேட்டுக்கொண்டார்கள்; ஆனால், இன்றையத் தினம் 'மெட்ராஸ்' என்றுதான் பெயர் வந்திருக்கிறது.

"'மெட்ராஸ்' என்றால்தான் உலகத்துக்குத் தெரியும்; தமிழ் நாடு என்றால் உலகத்துக்குத் தெரியாது' என்று கனம் சுப்பிரமணியம் சொல்கிறார்; தமிழரசர்கள் ஆண்டது உலகத்துக்குத் தெரியாதா? தமிழ் நாட்டின் பேரால்தான் அவர்கள் ஆண்டார்கள்.

"இந்தியாவுக்குப் 'பாரத்' என்று பெயர் வைக்கவில்லையா? அது எந்த வெள்ளைக்காரனுக்குத் தெரியும்? இந்தியாவுக்கு 'பாரத்' என்று பெயர் வைக்கும்போது, சென்னைக்கு ஏன் 'தமிழ் நாடு' என்று பெயர் வைக்கக்கூடாது?

"மேலும், 'பார்லிமெண்ட்' என்பது வெள்ளைக்காரன் வைத்தப் பெயர்தான்; அதை இப்போது 'லோக் சபை' என்று மாற்றவில்லையா? இதையெல்லாம் நாங்கள் கேட்டால், எதிர்க் கட்சிக்காரர்கள் சொன்னால் நாங்கள் ஏன் மாற்றிக்கொள்ள வேண்டும்? என்று கேட்கிறார்கள்.

"முதலமைச்சர் காமராசர், 'குளம் வேண்டும்—மேடு வேண்டும்,' என்று, பிரச்சினையையே கிண்டல் செய்கிறார்; 'பீர்மேடு, தேவிகுளம் எங்கே போனால் என்ன? நாம் இங்கேதானே இருக்கப் போகிறோம்' என்கிறார் வேறு ஒரு மந்திரி; இந்தத் தமிழ் நாட்டிலே இருக்கிற மந்திரிகள் கேலிக்குரிய சித்திரங்களாக இருக்கிறார்களே என்றுதான் நாங்கள் வருத்தப்படவேண்டிய சூழ்நிலையிலே இருக்கிறோம். இந்தப் பிரச்சினையை கிண்டல் செய்யவேண்டாமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

"உங்களுக்கு இருப்பதைவிட அதிகமாக உணர்ச்சி எனக்கும் இருக்கிறது' என்று நிதியமைச்சர் அடிக்கடி கூறுகிறார்; ஆனால் கட்சிக் கட்டுப்பாட்டின் காரணமாக வெளியே காட்டமுடியவில்லை போலும்! 'தமிழ் நாடு' என்று பெயர் வைப்பதற்குக்கூட ஆளவந்தார்கள் தயங்கினால் வேறு என்ன தான் சாதிக்கப்போகிறார்கள்?

"மற்ற சர்வ கட்சித் தோழர்கள் எல்லாம் சேர்ந்து, இந்தப் பிரச்சினையை பொது மக்களுக்கு எடுத்துச்சொல்லி, அர்த்தால் நடத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டதன் பேரில் தமிழ் நாடெங்கணும் பொது மக்கள் ஆதரவு காட்டினார்கள். நிதியமைச்சர் சுப்பிரமணியம் இதை ஒப்ப மறுக்கிறார். பேசவேண்டிய உறுப்பினர்களை பேசவிடாமல் வைத்து இருக்கிறார். இதுதான் ஜனநாயகமா? இந்த ஜனநாயகத்தை வைத்துக்கொண்டு மற்ற நாடுகளுக்கு இவர்கள் என்ன வழி காட்டப்போகிறார்கள் என்றுதான் கேட்கிறேன்.

"இங்கே அங்கம் வகிக்கும் மலையாள உறுப்பினர்கள் கேரள நாட்டுக்கும், தமிழ் உறுப்பினர்கள் தமிழ் நாட்டுக்கும் போகிறது போல, இங்கே உத்தியோகம் பார்க்கிறவர்களையும் அனுப்பவேண்டியது நம் கடமை. அப்போதுதான் தமிழ் நாட்டில் இப்போதிருக்கும் வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியும். இதை நான் சொல்லுவதாலேயே மலையாள கன்னட உறுப்பினர்கள்மீது எனக்கு வெறுப்பு என்பதல்ல; தமிழ்நாட்டுக்காரர்கள் அவர்கள் நாட்டிலே (மலையாள நாட்டிலும், கன்னட நாட்டிலும்) உத்தியோகங்களிலிருந்தால் அவர்களை நம் நாட்டுக்கு அனுப்பிவிடலாம். இதனால் அவர்களுக்கும் நமக்கும் சண்டை வந்துவிடாது.

"நிதியமைச்சர், 'பிரிவினை மனப்பான்மையை நான் ஆதரிக்க முடியாது' என்று சொன்னார். இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரியவில்லையா? பாகிஸ்தான் பிரிந்த காலத்திலும் இப்படித்தான் சொன்னார்கள்; பாகிஸ்தான் பிரிந்ததா, இல்லையா என்று கேட்கிறேன்.

"இன்றைய சர்க்கார்—காங்கிரஸ் கட்சி, நம் கோரிக்கைகளை ஏற்க முடியாதென்று சொல்லுகிறது. ஆனால் நானே இதை ஒத்துக் கொள்ளத்தான் போகிறது.

"நமக்கு மலையாளிகளுடனோ, மற்ற யாருடனோ வெறுப்பு கிடையாது. மொழி வழியாகப் பிரிந்து இனவழி சேர்ந்து வாழ வேண்டுமென்பதுதான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் நோக்கமாகும். இதை காங்கிரஸ்காரர்கள் ஏற்றுக்கொள்ளவில்லையென்றாலும், என்றாவது ஒருநாள் ஏற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும்.

"இறுதியாக நான் சொல்லுவது, இந்த மாநிலத்திற்குத் 'தமிழ் நாடு' என்று பெயர் வைக்கவில்லையென்றால், எதிர்காலத்தில் தேர்தல் வரும்போது, அதன் பலனை காங்கிரஸ்காரர்கள் அனுபவிப்பார்கள் என்று எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன்!"

## வெகுவாக அக்கரை கொண்டிருக்கின்றனராம்!

சென்னை, மார்ச் 27—

"தாம்பரம் — விழுப்புரம் இடையே மின்சார இரயில் போக்கு-வரத்தை விரிவுபடுத்தும் திட்டம் விரைவிலேயே அமுலாக வேண்டுமென்பதில் சென்னை சர்க்கார் வெகுவாக அக்கரை கொண்டுள்ளனர்,"

என்று, சட்டசபையில் அமைச்சர் பக்தவத்சலம் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் தெரிவித்துள்ளார்.

இந்தியாவில், 1954-55-ம் ஆண்டில் மொத்தம் 38,000 விசைத்தறிகள் வேலைசெய்து வந்ததாக மதிப்பிடப்பட்டுள்ளது.

## பக்கிங்காம் கால்வாய் அபிவிருத்தியாகுமா?

### ரூ. 115 இலட்சம் செலவில் திட்டமொன்று பரிசீலனையாம்

உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்தின் அபிவிருத்திக்காக இரண்டாவது திட்டக் காலத்தில், மொத்தம் சுமார் ரூ. 3,40,000 செலவு மதிப்புள்ள திட்டங்களை மேற்கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக்கிறதாம்.

பக்கிங்காம் கால்வாயை சென்னைத் துறைமுகத்துடன் இணைக்கும் [illegible] வேலைத் திட்டம் உட்பட அதன் அபிவிருத்திக்கான சுமார் ரூ. 115 இலட்சம் செலவு மதிப்புள்ள திட்டமொன்றும், மேற்குக் கரையோரக் கால்வாய்களின் அபிவிருத்திக்கான ரூ. 43 இலட்சம் செலவு மதிப்புள்ள திட்டமொன்றும் பரிசீலனை செய்யப்படுவதற்காகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றனவாம்.

## 'ரேடிய சிகிச்சை' முறை

### அமைச்சர் ஷெட்டி தகவல்

சென்னை மாநிலத்திலுள்ள எல்லா முக்கியப் பெரிய மருத்துவமனைகளிலும் 'ரேடிய சிகிச்சை' வசதிகள் இன்னும் சிறிது காலத்திற்குள்ளாகவே அளிக்கப்படும் என்றும், அந்த மருத்துவமனைகளில் புற்றுநோய் சிகிச்சைப் பிரிவுகளும்கூட ஆரம்பிக்கப்பட்டுவிடுமென்றும் மாநில சுகாதார அமைச்சர் ஏ. பி. ஷெட்டி, சென்னை மேல் சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

# ஆளும் கட்சியினர் 'போக்கு'க்கு அமைச்சரின் 'சப்பைக்கட்டு'

## தமிழ் மன்னர்கள் காலத்தில் 'தமிழ் நாடு' என்ற பெயர் இருந்ததில்லையாம்!

### புனரமைப்பு மசோதா திருத்தங்கள் மீது விவாதம்

சென்னை, மார்ச் 29—

"தேவிகுளம்—பீர்மேடு, மற்றும் தகராறுகள் உள்ள தமிழகப் பகுதிகளையெல்லாம் உள்ளடக்கிய சென்னை மாநிலம் இனிமேல் 'தமிழ் நாடு' என்ற பெயரால் அழைக்கப்பட வேண்டும்' என்று கோரும் திருத்தப் பிரேரணை ஒன்றை, மாநிலப் புனரமைப்பு மசோதாவின் 4-வது பிரிவுக்கு அடுத்தாற்போல் 4-ஏ பிரிவாகச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று தோழர் கே. விநாயகம் பிரரேபித்தார்.

அவர் பேசுகையில், விவாதத் துவக்கத்தில், 'தமிழ் நாடு' எந்தக் காலத்திலும் அப்பெயரால் அழைக்கப்பட்டதில்லையென்று அமைச்சர் சுப்பிரமணியம் கூறினது தவறு என்றும், அந்தக் காலத்திலும்கூட சேர—சோழ—பாண்டிய மன்னர்கள் ஆண்ட காலத்திலும்கூட, 'தமிழ் நாடு' என்ற பெயரால் அழைக்கப்பட்டே இருக்கிறது என்றும் குறிப்பிட்டார்.

உடனே, நிதி அமைச்சர் குறுக்கிட்டு, 'அந்தப் பெயரிட்டு ஒரு வேளை புலவர்கள் அழைத்திருக்கலாமே தவிர, அதிகார பூர்வமாக அழைக்கப்பட்டதில்லை' என்று கூறினார்.

தோழர் விநாயகம் மீண்டும் பேசுகையில், 'அதிகாரத்தைக் கைப்பற்றியிருக்கும் கட்சி, இந்தப் பெயர் மாற்றம் கூடாது என்று தீர்மானித்துவிட்டது என்பது புலனாகிறது; அப்படியானால், வருகிற பொதுத் தேர்தலின்போது பார்த்துக்கொள்ளலாம்' என்று கூறினார்.

கம்யூனிஸ்டு உறுப்பினர் தோழர் கே. டி. ராஜு பேசுகையில், சரித்திர ஆதாரம் இருந்தாலோ அல்லது இல்லாமற்போனாலோ பரவாயில்லை என்றும், ஆனால் தாம் கூற விரும்புவதெல்லாம், நாட்டிலுள்ள பெரும்பான்மை மக்களின் விருப்பமெல்லாம் 'தமிழ் நாடு' என்ற பெயர் மாற்றம் வேண்டும் என்பது தான் என்றும், இதுவே பெயர் மாற்றம் நிச்சயம் தேவை என்பதற்குப் போதுமான காரணம் என்றும் சுட்டிக்காட்டிப் பேசினார்.

தோழர் ப. ஜீவானந்தம் பேசுகையில், தமிழர்கள், தங்கள் நாடு 'தமிழ் நாடு' என்று அழைக்கப்பட வேண்டுமென்பதை இதுவரை மறந்ததே இல்லை என்றும், தங்கள் நாட்டைத் தாங்கள் விரும்பும் பெயராலேயே அழைக்கவிட்டுப் பெருமைப்பட்டுக் கொள்வதில் தவறில்லை என்றும் எடுத்துக்காட்டினர்.

இதே திருத்தங்களைத் தோழர்கள் தங்கவேலும், எம். பழனியாண்டியும் ஆதரித்திருக்கிறார்கள்.

நிதி அமைச்சர் விவாதத்திற்குப் பதிலளிக்கையில், சர்க்கார் இப்பிரச்சினையை நன்றாகப் பரிசீலித்த பின்னரே, பெயர் மாற்றம் தேவையில்லை என்ற முடிவுக்கு வந்திருக்கிறது என்றும், எனவே நாட்டின் பெயர் எதுவானாலும், ஒவ்வொருவரும் நடந்துகொள்ளும் முறையும், கருத்துக்களும்தான் தேவையென்றும், அந்த வகையில் தமிழ் மக்கள் தங்களை உண்மையான தமிழர்களாகக் காட்டிக்கொள்வர் எனத் தாம் நம்புவதாகவும் கூறினர்.

தோழர் விநாயகம் கொண்டுவந்த தீர்மானம் நிராகரிக்கப்பட்டதாக சபாநாயகரால் அறிவிக்கப்பட்டது.

எதிர்க்கட்சி உறுப்பினர்களால் அத்திருத்தம் வலியுறுத்தப்பட்டு வாக்கெடுப்பிற்கு விட்டதில், பிரரேபணைக்கு ஆதரவாக 26 வாக்குகளும், எதிராக 67 வாக்குகளும் கிடைத்து தோல்வியுற்றது.

வாக்கெடுப்பின்போது, முஸ்லிம் லீக் கட்சி உறுப்பினர் ஜனாப் முகம்மது ஹனிபா, டாக்டர் கே. பி. மேனன், ம. சோ. கட்சியைச் சேர்ந்த 5 உறுப்பினர்களும் நடுநிலை வகித்து வாக்கெடுப்பில் கலந்து கொள்ளவில்லை.

# தென்னிந்தியர் வாழ்வுபெற கட்டாய இந்தி தேவையாம்!

## வட நாட்டில் வியாபாரம் செய்யலாமாம்-தந்தி-அஞ்சல் குற்றேவலுக்குத் தகுதி பெறலாமாம்!

## சென்னை அரசாங்க இந்தி போதனை ஏற்பாடு—முட்டாள்தனமான வகுப்புவாத எதிர்ப்பின் விளைவாம்

## இந்தி மொழி பயிலாவிட்டால் பிற்பட்ட மக்கள் எதிலும் ஏமாற்றமடைவார்களாம்!

## அதற்கான கிளர்ச்சியில் அவர்கள் ஈடுபட வேண்டுமாம்!

இரண்டாம் எண் இந்தி இந்தியர் சந்தானம் அய்யங்காரின் அழுகியப் பேச்சு

சென்னை, மார்ச் 30—

"இந்தி மொழியை வெறும் விருப்பப் பாட மொழியாக மட்டும் ஆக்கவேண்டும் என்ற சென்னை சர்க்காரின் எண்ணம், முட்டாள்தனமான வகுப்புவாத உணர்ச்சியின் காரணமாக எழுந்தது தான். இடைநிலைப் பள்ளிகளில் இந்தி மொழியை விருப்பப்பாட மொழியாக்கியிருப்பது குறித்து மீண்டும் ஆலோசனை செய்து, அரிசனர்களுக்கும், பின்தங்கிக் கிடக்கிற மக்களுக்கும் எதிர்காலத்தில் நன்மை பயக்கும் வகையில், தன்னுடைய இம்முடிவை சென்னை சர்க்கார் மாற்றிக் கொள்ளவேண்டும்."

இவ்வாறு, இந்திய சர்க்காரின் நிதிக் குழுத் தலைவர் கே. சந்தானம் அய்யங்கார் தாம்பரம் இந்தி வித்தியாலயத்தில் பேசுகையில் கூறியுள்ளார்.

மேலும் அவர் குறிப்பிட்டதாவது:—

"இந்தி மொழி வெறும் விருப்பப்பாட மொழியாக மட்டும் இருப்பதால், பிற்காலத்தில் தாழ்த்தப்பட்ட, பின்தங்கிக் கிடக்கிற மக்கள் பெரும் அவதிக்குள்ளாவார்கள்; எனவே, தாழ்த்தப்பட்ட, பின்தங்கிக் கிடக்கிற மக்கள் தலைவர்கள், தங்கள் பிள்ளைகளை, இந்தி மொழியைக் கட்டாயப் பாடமாகப் படிக்க வற்புறுத்த வேண்டும்.

"இடைநிலைப் பள்ளிகளில் படிக்கும் 4,68,000 மாணவர்களில் 3,74,000-க்குக் குறையாத மாணவர்கள் இந்தி மொழியை மூன்றாந்தர மொழியாகப் பயிலுகின்றனர்; இவர்களில் யார் இந்தி மொழியைப் படிக்கவில்லை என்பதைக் கண்டறிய வேண்டும். அப்படி இந்தி மொழி படிக்காமலிருக்கிற மாணவர்களில் பெரும்பாலானவர்கள் பின்தங்கிக் கிடக்கிற வகுப்பு மாணவர்களே என்பதில் சந்தேகமில்லை. இதன் விளைவு என்னவென்றால் விரிவுபடுத்தப்பட்டு வருகிற மத்திய சர்க்கார் வேலைகளில் அவர்களுக்கு இடமே கிடைக்க முடியாத நிலை ஏற்படும். எனவே, 'உயர் வகுப்பு மக்கள்' என்று கூறப்படுகிற வகுப்பு மாணவர்களுக்கு இந்தி மொழி விருப்ப மொழியாகப் பயிற்றுவிப்பதில் எவ்விதத் தடையும் இல்லை. எனவே, சென்னை சர்க்கார் உடனடியாக இந்த நிலையை மாற்றியாக வேண்டும். அப்படிச் செய்யாது விடுத்தால் இராணுவம், கடற்படை உட்பட மத்திய சர்க்கார் அலுவல்களில் தான் அடைந்துள்ள பங்கை பறிகொடுத்துவிட வேண்டிய நிலை ஏற்படும்.

"தமிழ் மொழியைவிட இந்தி மொழி உயர்ந்தது என்பதை நானும் ஒத்துக்கொள்ளவில்லை; ஆனால், அதை நேர்மாறாக மாற்றுவது ஒன்றும் கடினமுமல்ல.

"இந்தியாவின் தேசிய மொழியென்ற நிலையை இந்தி மொழி வேகமாக அடைந்து வருவதை எவராலும் தடுத்துவிட முடியாது. அதே நேரத்தில், அகில இந்திய மொழியாக இந்தி மொழி ஆவதை எதிர்ப்பவர்கள், நாடு முழுமையிலும் இந்தி கட்டாயமாகப் புகுத்தப்பட வேண்டும் என்று கருதுகிற 'இந்தி ஏகாதிபத்தியவாதி'களின் கைப்பாவைகளாக ஆகிவிடுவதையும் உணராமல் இருக்க முடியவில்லை."

பள்ளிகளில் போதனு மொழியாகத் தாய் மொழியும், கட்டாய இரண்டாந்தர மொழியாக ஆங்கிலமும் ஆக்கப்பட்டதில் தமக்கு ஒன்றும் ஆட்சேபணையில்லையென்றும், ஆனால், இந்தி மொழி வெறும் விருப்பப்பாட மொழியாக மட்டுமே இருக்க வேண்டும் என்பதற்குக் கூறப்பட்டுள்ள நியாய வாதங்கள் எவ்வகையிலும் ஒத்துக்கொள்ளப்பட முடியாதவை என்றும் அவர் கூறியிருக்கிறார்.

மேலும் அவர் பேசுகையில் கூறியுள்ளதாவது:—

"பல துறைகளிலும் இன்னும் இந்தி மொழி வளர்ச்சி பெற வேண்டியிருப்பது குறித்து மகிழ்ச்சியே; அவ்வகையில், அதனுடைய வளர்ச்சிக்காகப் பாடுபட முடியும்; மேலும் வருகிற ஆண்டுகளில், சமஸ்கிருதத்தைப்போலவே இந்தி மொழி இலக்கியம், சிந்தனைகளிலும் தென்னிந்திய மக்கள் கவனம் செலுத்துவார்கள்.

"மேலும், சிறந்த இந்தி மொழி எழுத்தாளர்களையும், பெரும்பான்மையான இந்தி மொழிப் பத்திரிகையாளர்களையும் அவர்கள் உருவாக்கினால்கூட அதில் நாம் ஒன்றும் ஆச்சரியப்படுவதற்கில்லை

"உயர்தர ஆரம்ப வகுப்புகளில், தேவையான அளவுக்கு இந்தி மொழியைப் போதிக்க முடியும். அப்படிச் செய்வதால், இடைநிலைக் கல்விக்குச் செல்லும் மாணவர்களுக்கு இந்திமொழியைப் போதிப்பதற்கு அதிகச் சிரமம், தேவை ஏற்படாது. ஆரம்பக் கல்வியுடன் நிறுத்திக்கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு இருக்கிற இந்தி மொழி அறிவினால், மத்திய சர்க்கார் நிர்வாகத்திலுள்ள தபல், இரயில் துறை வேலைகளில் 4-வது பிரிவுகளுக்குத் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளவும் முடிவதுடன், தொழில் துறையிலும் அவர்களுக்கு உதவியாக இருக்கும்."

---

## மாநாட்டுத் தொண்டர் படைக் கூட்டம்

1—4—56 இரவு 7 மணிக்கு, திருச்சி மாநில மாநாட்டு அலுவலகத்தில், பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் முன்னிலையில், மாநில மாநாட்டுத் தொண்டர் படை அமைப்புக் கூட்டம் நடைபெறும். எனவே, தொண்டராகப்பணியாற்றவிரும்பும் திருச்சி நகரத்தில் உள்ள தோழர்கள் அனைவரும் தவறாது வருகை தர வேண்டுகிறேன்,"

என்று, செயலாளர் எம் எஸ் மணி அவர்கள் அறிவிக்கிறார்.

---

## சி. பி. சிற்றரசு

சுற்றுப்பயணம்

ஏப்ரல் 1 : கொணவட்டம்
2 : சத்திரவாடி (நகரி)
6 : வந்தவாசி
8 : சென்னை
9 : ஆளடிக்குழூளை
10 : திருப்பத்தூர் (இராமநாதபுரம் வட்டம்)
12 : மேக்கிரிமங்கலம்

---

### சென்னை 40-வது வட்ட தி. மு. கழகத் தோழர்கட்கு:

1—4—56 இரவு 7 மணியளவில், சேப்பாக்கம், லால்பேக தெரு, எண் 4, இல்லத்தில், செயற்குழுக் கூட்டம் நடைபெறும் அது போது, சென்ற செயற் குழு ஒத்தி வைக்கப்பட்ட பிரச்சினைகள் பற்றி ஆராய்ந்து முடிவு காணுதலும், செயலாளர் தேர்தலும் நடைபெறும்.

---

### நாமக்கல் வட்ட ஆரம்ப ஆசிரியர் 'யூனியன்' மகாசபைக் கூட்டம்

1—4—56 பகல் 1 மணிக்கு நாமக்கல் கோட்டை ஆரம்பப் பள்ளியில், மேற்படி கூட்டம் நடைபெறும். அதுபோது நிர்வாகிகள் தேர்தலும், யூனியனுக்கு கட்டிடம் கட்டுவது பற்றி ஆய்வும் நடைபெறும்.

---

### சொற்பயிற்சிக் கூட்டம்

1—4—56 காலை 9 மணியளவில், சென்னை—குளை 17-வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில், சொற்பயிற்சிக் கூட்டம் நடைபெறும். 'தற்கால அரசியல்' என்ற பொருள் பற்றித் தோழர்கள் பலர் பேசுவர்.

---

## பூனாவில் தென்னாட்டவர் கைது செய்யப்பட்டனர்

பூனா, மார்ச் 29—

சம்யுக்த மாராட்டிரம் வேண்டுமெனக்கோரி மறியல் செய்த 7 தென்னாட்டவர்களைப் போலீசார் கைது செய்துள்ளனர். எழுபேர்களடங்கிய இக்குழுவில் ஆந்திர, கேரள, தமிழ் நாட்டைச்சேர்ந்தவர்கள் இருந்தனர். கிர்கியிலுள்ள பாதுகாப்பு ஊழியர் தொழிலாளர் சங்கத் தலைவரான ஆர். கோபால கிருஷ்ணன் என்பவரின் தலைமையில் இந்த மறியல் நடைபெற்றதாம்.

---

## 'கொள்கையை தெளிவாக வரையறைக்க வேண்டும்'

பம்பாய். மார்ச். 29—

தொழில்களை சர்க்கார் உடமையாக்குவது பற்றிய தம் கொள்கையை, இந்திய அரசினர் தெளிவாக வரையறுக்க வேண்டுமென்று அரசாங்க பாங்கு தலைவர் டாக்டர் ஜான் மத்தாய் கோரியுள்ளார்.

---

### திருவள்ளுவர் முன்னணிக் கழகம்

1—4—56 மாலை 7 மணிக்கு, சென்னை—பழைய வண்ணையம்பதி, 15, நாகப்பநாய்க்கன் தெரு, கழகப் பணிமனையில், தோழர் மு. கிருட்டிணன் தலைமையில் 'கிளையு:—நினைப்பும்' என்னும் பொருள் பற்றி கழகத் தோழர்களும், மன்ற உறுப்பினர்களும் பேசுவர்.

---

### திருவள்ளுவர் முத்தமிழ்க் கழகம்

5—4—56 மாலை 7 மணியளவில், சென்னை—லாயர் சின்னத்தம்பி முதலி தெரு, எண் 10, மேற்படி கழகக் கட்டிடத்தில், தோழர் ஆ. சி. சுப்பிரமணியம் தலைமையில், 'தற்கால அரசியல் நிலை' பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

---

### பட்டிமன்ற விவாதம்

1—4—56 காலை 9 மணிக்கு, சென்னை—திருவல்லிக்கேணி எண் 4, நமசிவாயமுதலித் தெரு, 42-வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில், தோழர் மு. வரதராசன் தலைமையில், 'இந்திய யூனியனில் சுயநிர்ணய அடிப்படையில் மொழிவழி அரசு பிரிக்கப்பட்டால் திராவிடம் தேவையா?' எனும் பொருள் பற்றி விவாதம் நடைபெறும். தோழர்கள் பலர் பேசுவார்கள்.

---

### சவ அடக்கம்

குளை தி. மு. கழக முன்னாள் செயலாளரும், இந்நாள் மாவட்டப் பிரதிநிதியுமான தோழர் சு. பாலன் அவர்கள் தந்தையார் டி. சுப்பிரமணியம் 26—3—56-ல் இயற்கை யெய்தினர்; மறுநாள் நடைபெற்ற சவ அடக்கத்தின்போது ஆலைத் தோழர்களும், பல வட்டங்களின் தி.மு கழகத் தோழர்களும் பெரும் அளவில் கலந்துகொண்டனர்.

---

# தேவிகுளம், பீர்மேடு பிரச்சினையில் மத்திய சர்க்கார் இழைத்தது அநீதி எனத் தாமும் ஒப்புகிறாராம்!

## அவ்வநீதி முடிந்துவிட்ட ஒன்றாம்-எல்லைக் குழுவிடம் விடக்கூடாததாம்!

## அமைச்சர்களுக்குத் துணிவில்லை என்பது அரசியல் செப்பிடுவித்தையாம்!

சென்னை சட்டசபையில் முதல் எண் தமிழ் இந்தியர் சுப்பிரமணியத்தின் அழுகை கலந்த ஆணவம்

சென்னை, டிச. 31—

சென்ற 28-ந் தேதியன்று, சென்னை சட்டசபையில், மாநிலத் திருத்த அமைப்பு மசோதாவை சமர்ப்பித்து, விவாதத்தைத் துவக்கி வைத்துப் பேசுகையில் அமைச்சர் சுப்பிரமணியம் பேசியவை ஏற்கனவே வெளிவந்திருக்கின்றன. தேவிகுளம், பீர்மேடு போன்ற பகுதிகள் தமிழ் நாட்டுக்குக் கிடையாது என்று திட்டவட்டமாகத் தெரிவித்து அவர் கூறிய மற்றும் சில கருத்துக்கள் இங்கு தரப்படுகின்றன:—

"தேவிகுளம், பீர்மேடு தாலுகாக்கள் சென்னையுடன் சேர்க்கப்படவேண்டும் என்ற கோரிக்கையை சென்னை சர்க்கார், மத்திய சர்க்காரிடம் வலியுறுத்தினது கிடையாது என்று கூறப்படுவது தவறு; இந்தப் பகுதிகளையும், கூடலூர், நீலகிரி, திரு-கொச்சி மாநிலத்தின் தென் மாவட்டங்களிலுள்ள ஐந்து தாலுகாக்களையும் பொறுத்தவரையில் அந்தந்த மாநில சர்க்கார்களால் தகராறுகள் எழுப்பப்பட்டன. எனவே அவைகளெல்லாம் முடிவு பெறாத சச்சரவுகளாகவே ஆகிவிடக்கூடும் எனவே, இவைகளைக் கவனித்துக் கொள்ள அமைச்சர்களுக்குத் திறமையில்லை என்று கூறினவர்களே அதைச் செய்திருக்கலாம். அவர்களெல்லாம் சட்டசபைக்கு வெளியே இருக்கிற தேர்தல்களில் தோற்றவர்கள்தான்(?) எனவே, இந்திய சர்க்கார்முன் மாநில சர்க்கார் இப்பிரச்சினையில் கண்டிப்பாகவும், தைரியமாகவும் நடந்துகொள்ளவில்லை எனக் கூறுவது வெறும் அரசியல் 'ஸ்டண்ட்' வேலைதான் என்றாலும், தேவிகுளம், பீர்மேடு பகுதிகள் சென்னைக்குக் கிடைக்கவில்லை என்பதில் உள்ள ஏமாற்றத்தில் நானும் பங்கேற்றுக்கொள்ளுகிறேன்.

இப்போது ஒன்றும் தனித்தனி சுதந்திர மாநிலங்கள் ஒன்றும் உருவாக்கப்பட்டுவிடவில்லை. நிர்வாகவசதிகளுக்காக மாநிலங்களைத் திருத்தி அமைப்பதுதான் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்தியா 'ஒரே அங்கமா'கவே நீடித்திருக்க வேண்டும். அதற்கு எதிர்ப்புத் தெரிவிப்பது பெருந்தவறும்— அரசியல் விவேகமற்றதுமாகும்.

"இப்பிரச்சினையை யொட்டி, காங்கிரஸ் அமைச்சர்கள் தங்கள் பதவிகளை இராஜினாமா செய்ய வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் சில கோரின. அது, அரசியல் நோக்கத்துடன் கூறப்பட்டதே தவிர வேறொன்றுமல்ல அதாவது, இந்தியா முழுமையிலுமுள்ள பலம் வாய்ந்த கட்சியாக காங்கிரஸ் கட்சி அமைந்திருப்பதால், அதிகார பீடத்திற்கும் தங்களுக்குமிடையே அக்கட்சி குறுக்கீடாக இருக்கிறது என்ற பொச்சரிப்பும், அப்படிப்பட்ட காங்கிரஸ் கட்சியில் பிளவு ஏற்படுத்தவேண்டும் என்ற எண்ணமும்தான். இந்தக் கட்சிகள், தற்போது உருவாகின்ற சில பிரச்சினைகளை இலகுவில் தீர்த்துக் கொள்ளத்தக்க வகையில ஏற்படவிருந்த சென்னை—திரு—கொச்சி மாநில இணைப்பையும், இந்தியா ஒரே அங்கமாக இணைந்திருக்க வேண்டும் என்ற கருத்தையும் எதிர்த்து வருகின்றன. அந்தக் கட்சிகளெல்லாம் நாட்டிற்குத் தேவையற்றப் பிரச்சினைகள் குறித்தெல்லாம் அரசியல் விளையாட்டுக்கள் ஆட வேண்டாம்."

இவ்வாறு பேசிய அமைச்சர் மேலும் தொடர்ந்து பேசினர்:—

"எனவே, ஏற்கனவே இறுதி முடிவுகள் மேற்கொள்ளப் பட்டுவிட்ட பகுதிகள் குறித்த எல்லைத் தகராறுகளுக்கு மசோதாவில் உள்ள ஷரத்துகள் உடன்பாடாகாது; மேலும் தேவிகுளம், பீர்மேடு, காசர்கோடு மற்றப் பகுதிகளைப் பொறுத்த பிரச்சினைகள் மீண்டும் எழுப்பப்பட்டு, அவைகள் எல்லைக் குழுவிடம் விடப்படும் என்றும் யாரும் கருத வேண்டாம் என்பதையும் தெரிவித்துக்கொள்ள வேண்டாம்."

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம் ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா, நெடுஞ்செழியன் எம்,ஏ.

